களத்திரத்தின் குறைநுபவம்.

மந்திரிகேந்திரகோணமலிவுறக்காமத்தோனே
யந்தமாமுதயமேழிலடையிற்கற்புடையதாரந்
தந்ததாரேசன்பாவசர்ப்பத்திரேகாணமேவிப்.
பந்தராகுடனேபத்திற்படிலவமாகதாரம். ௬௬௩

இதுவுமது

காமகேந்திரமிரண்டுக்கதிபர்சேய்பாம்பைக்கூடிப்
பாமருக்குருராங்கிசத்திற்படிற்றுட்டகளத்திரமாகு
மாமதுவல்லதாகிலடுத்திடுந்தாரம்ரெண்டாந்
தோமருங்கவலையெய்தித்தொந்தரைப்படுவன்றானே ௬௬௪

இதுவுமது

தாரேசன்மதியுமாகிச்சத்தியபாவமத்தியம்
போரேறுபாவவர்க்கம்பொருந்திடிற்சடிநியாகி
யாரேனுமெண்ணுளாகியடிபட்டுக்கொண்டெந்நாளும்
பேரேதுர்மார்க்கியென்றபேருளதாரமெய்தும் ௬௬௫

இதுவுமது

தங்குதாரேசன்சேயாய்சநியுறுகுரூரசஷ்டி
யங்கிசமேறிநீசமஸ்தமாநர்தானுகப்
பங்கமில்சுபர்நோக்காரேற்பாருடன்கூடிக்கொண்டே
விங்கிதக்கணவனேடேமிகுஞ்சண்டையிடுவடானே. ௬௬௬

இதுவுமது

பன்னுதாரேசன்மாலாய்ப்பாவமத்தியமாய்நீசந்
துன்னூடத்தச்சார்நதுசுபதிஷ்டியில்லாதாயின்
மன்னுங்காதலனைக்கொல்வள்வருங்குலநாசமாக
வுன்னுந்தீவினைகள்செய்வளொளிகதிர்வேற்கண்ணளே. ௬௬௭

இதுவுமது

வெள்ளிதான்பாவர்மத்யமேவியேநீசமூடந்
தள்ளிடவிருந்துபாவமுறுவர்க்கம்பெற்றுநிற்கி
லள்ளிலேவேற்கணல்லாளவமாகவேசைமிக்காய்க்
கள்ளியாய்த்திருடியாகிக்கபடியாயிருப்படானே. ௬௬௮

இதுவுமது

சநியனேபாவமத்யந்தனையுற்றேபக்கமாநம்
புனிதமினுசமேவிப்பொருந்தியேயழினிற்கிற்
கனிவிலாவேசையாகிக்கடிநியாய்த்திருடியாகித்
தொனிபாதுஷணஞ்செய்துன்மார்க்கியாவண்மாதே. ௬௬௯

இதுவுமது

கொடுங்கதிர்பாம்பினேடுகூடித்தார்தாநமேவி
நடுங்கியேபாவவர்க்கநண்ணியேநீசமேறி
லடுஞ்சுபர்பாராராகில்வைக்கியாதியுடையளாகித்
தொடும்புருடனுக்கேநஞ்சூதினைற்கொடுத்துக்கொல்வள். [illegible]

இதுவுமது,

மதிசனியேழிற்கூடில்வரும்பொல்லாக்களத்ரமென்பர்
பதியுஞ்சேயேழினிற்கப்பாவிமாரோகதாரந்
துதிகுருவேழிற்சநேசன்றிடிற்றுட்டையாவ
ள்திபரியெட்டுமேழூற்ருற்றுட்டகளத்ரமாமே.

இதுவுமது.

குசன்சனிராகுவேழிற்குறுகிடுமேனும்பாவர்
நிசம்பெறுபானுவங்சநின்றிடுமேனுந்துட்டை
நசங்கொண்மால்சரிநின்ருலுஞ்சுடரவன்மதிநின்ருலுங்
கசந்துவேருகுமபொல்லாக்களத்திரமென்றுகூறே.

இதுவுமது,

இசையும்லக்கினத்திற்காரியிருக்கிற்பொல்லாததார
மசைவில்காமத்தின்மார்தியடைந்திடவழகிலாதாள்
வசையில்சுக்கிரனுக்கேழில்வக்கிரனிருக்கிற்கள்ளி
திசைபடாப்பழிகள்சொல்வடேசிலப்பாவியாமே.

இதுவுமது.

வெள்ளிக்கேழிரவிநிற்கின்மிகவுங்கலகிகுளிகனிற்கி
லென்ருரிதழுமுரோகமுனைாளிராகுநிற்கிலழகில்லாள்
கள்ளிபாவிரோகியதாங்கடும்பாவியருங்குருவுநிற்கிற்
பிள்ளைதனைப்பெற்றிழப்பளின்சொற்பேசுமதலைகுயின்மொழியே. ()

இதுவுமது.

இரவியுதயத்தனிலிருக்கவேழிற்புகரோனிருக்கப்பொன்
பரவிப்பாராநிருந்திடினும்பன்னுமேழிற்சனிபுதனும்
விரவியுறினுமோரேழின்வெய்யோனிருக்கவுதயமொன்பான் (ர்
புரிவில்விடம்விட்டெவ்விடத்தும்பொன்ஞேனிருக்கின்மலடியென்பா

இதுவுமது.

புகருமேழுக்குடையோனும்புதற்குச்சநிக்குநடுவுறினு
நிகருமேழிலும்பகேதுனிற்குமேனுமலடியென்பார
பகருமேழின்மதியங்சம்பண்ணவேழொன்றினினிற்கிற்
சுகமில்கணவன்றனைக்கொல்வாடிநேரிடையஞ்சனவழியே,

இதுவுமது.

மேடலக்கினத்திற்செங்கதிரிருக்கமிகும்பவர்காமத்திற்கூட
வேடவிழ்வெள்ளிகன்னியங்கிசமாயிருநதிடிற்புருடனைககொல்வ
ட்டருமேழுக்குடையவன்புதனைச்தியவாதன்னுடன்கூடி ஸ்
டரும்பெலமபோய்ப்பாவமத்தியமாய்னின்றிடிற் புருடனைக்கொல்வ

இதுவுமது,

ஏழினிற்சாமியிருந்திடச்சனியனேழினிலங்கிசமாக
ஆழியாம்புகர்ககோரேழினிற்சனிபனுறில்விபசாரமாநதார
மாழியவேழின்மிகுவிடக்கடிலகையமர்ந்திடராகுவுஞ்சனியுக்
காழியகுளிகன்சேயுமேகூடித்தானிற்கின்வேசையாந்தாரம்.

இதுவுமது,

எழுநிலக்கினத்துக்கேழாமிடம்புகர்வீடதாகப்
பழுதறுசனிசேய்நிற்கப்பகர்பொன்னேன்பூராணுகிற்
றழுவியகொழுநன்காணத்தான்விபசாரஞ்செய்வள்
கழுவினிநெயயுருக்குங்கள்ளியதாரமாமே (தகூ

களத்திரத்தின்பருவம்.

விரவேழின்மதிநிற்கிற்சமயவதையுடையாள்
வெள்ளிநிற்கிற்றனக்கிளையாள்சனிராகுநிற்கிற்
பரவுவயததிகமென்பார்மதிபொன்சநிகூடிற்
பகர்விருத்தைவெள்ளிசநிசேய்கூடினலுந்
திரவுதயலக்கினத்திற்சநியிருக்குமேனுஞ்
சேருதயமிரண்டேழிற்சநிராகுமாந்தி
வரவிசைந்தோன்றாய்க்கூடிமகிழ்ச்சியாய்நிற்கின்
மையலாய்விதவைதனைமகிழ்ந்தணைவன்மாதே.

தூர்க்காமி.

சேருதயமிரண்டேழிலிருந்தபுகர்மதிக்குத்
திகழேழிற்சநிராகுகுளிகனுடனிற்கிற்
கூறுமதிலவமானநீசஸ்திரீகமனங்
குறிக்குமிவருடன்பாவரிருக்கநல்லர்பார்க்கி
னேறுறுசங்கரசாதிமடந்தையரைப்புணர்வ
னீடுதயமிரண்டேழினின்றமதிபுகர்க்கு
மாறுமொருவேழிற்சேய்கேதுட்னேகூட
வதற்குடையோர்தனைக்கூடத்தூரஸ்திரீகமநன். (தகஞ

இதுவுமது,

உதயமிரண்டேற்பத்திற்சநிசெவ்வாய்பார்க்க
வுடனிற்கவிதற்குடையோர்தனைக்கூடிப்புகணா
யிதயமுற்றுறப்புகருக்கேழினிற்குமேனு
மெழில்விதவைதனைச்சேர்வன்சாமிகளோழிற்
புதைவுறுதீயோர்கூடவுதயமிரண்டேழிற்
புகர்க்கேழிக்குளிகனிங்கவவர்களுடன்கூடிற்
சிதையுமுறின்மேற்பட்டதொழுத்தயைச்சேர்வன்
சீதளப்பங்கயமுனைகபோற்சிறந்ததநமயிலே.

இதுவுமது.

காட்டுதயமிரண்டேழிந்சேயிரவிகூட
நவில்குளிகனுடனிருக்கில்விதவைதனையணைவன்
பூட்டுபுகருதயத்திலிரண்டேழிலாகப்
புகன்மாந்தியுடன்சேரிற்கொப்பஸ்திரீகமன
நீட்டுகதிர்சேர்ந்திருக்கத்திரள்பாவர்நாலி
நிற்கப்பொல்பாவையன்றிநாலோனுமதியு

இதுவுமது.

மீட்டுபோவரைக்கூடியேழினிற்கவன்றி
யேழுடையோனைக்கூடினெழின்மாதுர்க்கமனன்.
தூயமதிச்சுக்கிரனுங்கூடிச்சேர்ந்திருக்கச்
சுபக்கிரகபார்வையின்றினாலேழுக்குடையோர்
நேயமுடன்கூடியேசதுரத்தகேந்திரத்தி
னிற்கின்மாதுருகமனனேழிரண்டுக்குடையோ
ராயநாலுடையோனைக்கூடிநிற்கவெள்ளி
யருக்கன்மதிபாவருடன்கூடிச்சேர்ந்திருக்க
வேயநாலாமிடத்திற்பாவரேயிருக்கின்
மிகமாதுர்க்கமனனெனவிளம்புவர்கற்றுணர்ந்தோர். ௩௧௪

இதுவுமது,

நாலுடையோன்பாவவர்க்கமாகியேபாவர்
நடுநிற்கப்பாவருடன்கூடவன்றிப்பார்க்க
வேலுதயம்பாக்கியத்துக்கிறைவர்பெலந்தாழ
வேழுநாலுக்குடையோர்கூடியேபெலக்கிற்
கோலுமாதுருகமனனாலுமிவர்தன்னைக்
குருபார்க்கின்மாதுருசமாநிதனைப்புணர்வன்
சேலுமிளம்பிறையுமணிச்சிலையுமுயர்மலையுஞ்
சேயரிக்கனுதற்புருவாதனைநிகர்தெள்ளமிர்தே. (௩௧௫)

இதுவுமது,

மொழியுமிரண்டேழ்க்குடையோர்சுக்கிரனைக்கூடி
மூன்றுநாலினிலிருக்கமூன்றுடையோன்பாவ
ரழிவுறவேகூடிநிற்கப்பார்க்கவேபொன்னோ
னருநோக்கிலாதுவிடிற்சோதரியைப்புணர்வன்
விழிவின்மூன்றினிற்பர்வரிருக்கமூன்றுடையோன்
வெகுபாவருடன்கூடியேழினிற்கவல்லாற்
பழிசெய்புமேழோனைப்புகர்தனைக்கூடச்சேய்
பார்க்கப்பொன்பார்வையற்றாற்சோதரியைப்புணர்வன்,

இதுவுமது.

சந்தனசட்டாட்டவியத்திருக்கவல்லாற்
சாற்றுசெவ்வாயுடன்கூடிநாலிலுறப்பாவர்
வந்தியுறப்பார்க்கவொன்றுநாலதிபன்கூடி
யிருகுடும்பத்தானத்திற்காமத்தானத்தின்
முந்நிற்கத்தெய்வமந்திரிநோக்கில்லாதாகின்
மொழியுமாதுருக்கிணையாமொய்குழலைச்சேர்வ
னிந்திரனுவைப்பழிக்கும்புருவவில்லினளே
யிப்பொருளைக்கணிதநூலெடுத்துரைத்தவாறே. ௩௧௬

இதுவுமது.

இணங்குபகற்சசிகமதிசுக்ரன்கூடி
யேழினிற்கவேழுடையோனிசைகாலிலாக
வணங்கியாலுக்குடையோனுதயமதைமேவின்
மாதுருசோதரிகாமிசியதனிற்பிறக்கப்
பிணங்குமதியேழுடையோன்றனைக்கூடிநாலிற்
பெலத்திருக்கவுதயத்தோன்றனக்கொன்பதுடையோன்
குணங்குறியும்பெலவீனமாகியேநிற்கிற்
குலமாதுர்சோதரியைக்குறித்தணைவன்மாதே, கஎஅ

இதுவுமது

நிறைகுருவெள்ளிகேந்திரநின்றிடவைந்துமைந்துக
மிறையுமேபாவவர்ககமெய்திடச்சநியின்பார்கக
வுறையும்லககினத்தில்ராகுவுறுதியாயிருககுமாயின்
மறைவின்றிப்புத்ரிதன்னைமருவுவன்மகிழ்ச்சியாலே.

இதுவுமது

ஒன்றென்பதுடையோர்பாவருடன்கூடிப்பாவவர்கக
நின்றிடப்பாவர்மத்யநிலையுறககதிரோன்சுக்கன்
மன்றலாய்க்கூடிககேந்திரமலிவுறவிலககினத்திற்
குன்றிடாச்செவ்வாய்நிற்கிற்குருகாரகமனனுவன், (கஉ0)

இதுவுமது

ஒள்ளியகுருவும்பானுமுதயத்திலிருககவேதான்
வள்ளியகாமத்தோனுமவருமூர்த்தியோனும்பார்ககி
லெள்ளியமறையோர்தங்களெந்திழைதன்னைச்சேர்வன்
றுள்ளியகயலைப்பாயுந்துணைநெடுங்கண்ணினாளே. கஉக

இதுவுமது

தொககுறுகாமத்தோனுஞ்சுடரவன்றானுங்கூடிற்
பக்குவமாகினன்மைப்படாதமின்றன்னைச்சேர்வன்
றககாமத்தோனலிற்சதுர்ப்பாகத்திரோகாணத்தின்
மிக்கதீககோட்களொன்றின்மிருகத்தைப்புணர்வன்மின்னே,

இதுவுமது.

ஏர்த்திடுங்களத்திரத்தோனிரண்டுமூன்றுடையோர்கூடிப்
பார்த்திடுநாலேழெய்திற்பசுவைமைதுனமேசெய்வ
னேர்த்திடுமிவரைக்காரிநோககிடிலெருமைமாட்டை
யார்த்திடுஞ்செவ்வாய்பார்ககிலாட்டைமைதுனமேசெய்வன்.

இதுவுமது

இயங்குமிரண்டுமூன்றினுக்கேயிறைவர்காலேழிற்கூடப்
பயங்கொள்சநிசேய்ராகுவெதிர்பார்க்கிற்கழுதைதனைப்புணர்வன்
றயங்குமிவரைச்சநிபார்க்கிற்றுரோகழுதைதனைப்புணர்வன்
மயங்குமோயூர்த்தாஸ்திரீமகிழ்ச்சியாகப்புணர்வானே (கஉச

இதுவுமது.

ஊர்க்குமொன்றேழன்ஞோர்கூடிடவொன்றுக்கொன்று
மார்ககமாய்ப்பார்க்கவாட்டைமைதுஞ்செய்வனமாதே
யோர்க்குமேழுடையோனுறிலிருந்திடச்சாமிபார்க்கிற்
சேர்க்குநற்பகன்மின்னாளைச்சேருவன்றிருமுந்தானே. (தஉரு)

இதுவுமது.

மட்டுறுமாந்திராகுவக்கிரன்காமத்தோனுங்
கிட்டுதுமாதிபஞ்சக்கிரகங்களொன்றாய்க்கூடிற்
கொட்டுதாடநமூர்தந்தக்குறிநகக்குறியும்வண்டச்
சொட்டுங்கைக்குட்டும்வேண்டுஞ்சூரன்மைநமேசெய்வேன். (தஉசு)

இதுவுமது.

செயகாமத்தோன்மூன்றுக்கதிபனைப்பார்த்திடக்கூடச்செவ்வாய்ப்பாம்
பியலாகவேகூடப்பார்க்கிலிவர்கேந்திரத்திலிலக்கினேசன் (பு
றயவாகவிருக்கில்பகற்சுமபநஞ்செய்வான்றிருமுந்தாநமோக
நயமாகுமிவன்மனையாள்விபசாரியாயிருப்பணளிநமாதே. (தஉஎ)

ஸதாநவியல்பு,

பத்தினிற்சேயிருக்கவன்றியெதிர்பார்த்திட்டாலும்
பருதிகுசன்காமத்தோன்கூடிலசுகதநத்தாள்
வைத்தசநிராகுவுடன்கூடில்கொஞ்சதநத்தாண்
மந்திரிசல்லியன்கூடிலழகுடையதநத்தாள்
குத்திருமன்மூன்றைந்துக்குடையோரேழோனைக்
கூடிடினும்பார்த்திடினுமபருத்ததநமுடையாள்
சத்திமதியேழுடையோன்றனைக்கூடிப்பார்க்கச்
சலராசியேழாகிற்றேப்பைநத்தவளே. (தஉஅ)

இதுவுமது.

சந்திரன்மால்காமத்தோனொன்றாகக்கூடிற்
சலராசிதனிலிருக்கிற்சல்லியமாமுலையாண்
முந்தியிவர்வக்கிரிக்கிற்றிருக்குமெந்தமுறுக்கு
முலையினள்சனியிருக்கசசேய்பார்க்குமேனு
முந்தியதோர்கடிநஞ்சனிராகுகுளிக
னுயர்பத்தாமிடமிருக்கில்வறறியதோர்தநமாக்
தந்திரதுமாதிபஞ்சக்கிரகம்பத்திருக்கிற்
சமதநமென்றுரைப்பார்கடான்கணிதநூலவரே, (தஉகூ)

இதுவுமது.

அரியபத்தினிற்பொன்னிற்கிலழகியதநத்தாளாகும்
பரிவொடுமதிதானிற்கிற்பருத்தெழுந்தநத்தினளாஞ்
சரியதாமேழிற்காரிதான்பார்க்கிற்பருத்தகொங்கை
வரியராய்ச்சநிசேய்கூடின்வற்றியவற்பதநயம. (தஙூ0)

பகவியல்பு,

நலியுஞ்சனியும்புதனுக்குநடுவிலேழுக்கிறையுறினு
மலியுமேழுக்கிறைக்கேழின்மந்தன்புகர்மான்மதியிருக்க
மெலியுந்துடையாணீண்டுவெற்றிவிரிவிலாதபகமுண்டியா
ளொளிசெய்வனைகமதநரசமொழுகுங்கனிவிரயொண்டொடியே, (

இதுவுமது,

உடன்படுமேழானுக்குமுயர்வெள்ளிதனக்குமெழா
மிடஞ்சலவிராசியாகவியன்மதியிருக்கநற்கோ
ளடர்ந்துதான்பார்ப்பாராகிலழகதாயகன்றுயர்ந்தே
ட்டம்பெறுபகத்தையுள்ளாள்பாலுந்தேனனையமானே. (தகூஉ)

இதுவுமது,

பன்னுமேழோனைமதிபுகர்கனைப் பொன்பார்த்திடின்மனோரதபகமாம்
பின்னுநதானிவர்கள்சுபருடன்கூடிப்பெலகேந்திரகோணத்திலிருக்கி
லுன்னுபொற்பகமாந்தாமுமேபருத்தேயுயர்தலகாயம்மேதுவாகு
மென்னுமிக்கோளைச்சநியனேபார்க்கி லிவைவெயலாஞ்சூட்சமென்று
ஸ்தானவிரணஸ்தான துடையில் விரணஸ்தள். (ரையே

வனிமதிபுசர்பொன்றன்னைமன்னியகாமத்தோனைச்
சனிசெவ்வாயிராகுமாந்திதான்கூடப்பார்க்கவேதான்
கனிவுறுபருஞ்சுவர்க்கங்கடிநமாய்விரணமாகித்
தொனிபெறுரோகமுள்ளதுடையினுளென்றுகூறே. (தகூச)

இரதித்தலம்,

கருதுமிரதித்தலங்கூறிற்காமத்தோனைக்குருகூடின்
மருவுந்தேவாலயமென்பர்மன்னும்புகரேசலக்கரையாஞ்
சருவுமிராகுசநிகுளிகன்றனக்குத்தோட்டம்வழிக்கரையில்
மருணன்றனக்கேகாடுசெடியல்லோன்றனக்கேசுயக்கிரகம். (தகூரு)

இதுவுமது.

களத்திராதிபனைச்செலவாய்கலந்திடிற்றனித்தவீடு
விளக்கிடுங்கூரையில்லாவீடுதானிரதித்தான
மவப்பிலர்ப்புதனேயாகிலவள்பிறந்தகவீடென்பார்
வளப்பமாக்கணிதநூலோர்வகுத்துரைசெய்தவாறே. (தகூசு)

சும்பநாதிகள்.

அந்தமாமொழிரண்டுக்கதிபர்க்குப்புகர்கேந்திரிக்கச்
சொநதலக்கிநத்திற்பாவர்தோன்றிடச்சாமிதானே
யெந்திரப்பாவரோடேலேழெட்டிலஞ்சமேனும்
பந்தமாய்ப்பாம்பேழோனும்பகற்சும்பநங்கள்செய்வான். (தகூஎ)

இதுவுமது.

எட்டிரண்டுக்குடையோனுஞ்சுக்கிரனுங்கூடி
யிரண்டிலுறவாக்கேசனெதிர்பார்க்குமேனுந்
தொட்டதநத்தோன்காமத்திறையைச்சேர்ந்தாலுந்
துய்யதநத்தோன்கீமத்தினிலிருக்குமேனும்

வட்டமதிக்கும்புகர்ககுஞ்சாமிக்குமிரண்டேழ்
வாய்த்தகிரகங்கூடவலக்கிரகமாறஞ்
பட்டிவிர்ரங்கிசத்தோரிப்படிநின்றாலும்
பரிந்துதாஞ்சும்பநேமேபண்ணுவன்பைந்தொடியே, (கஙஅ)

இதுவுமது.

பத்தாமிடத்துக்கிறைதனக்கும்பண்பரர்க்குமிரண்டேழ்க்கு
முத்தாரங்சாதியர்தமக்குமோங்குநாலாமிடத்திறைக்கும்
வித்தாமிரண்டேழிறைகூடவிரைந்துக்கிரகமாறிடினு
முத்தார்முலையைநெருடிமெள்ளமுகர்வுற்றினிதாய்ச்சுவைத்திடுவன்

இதுவுமது.

இல்லறமொன்றேடேழுக்கிறையவரொன்றாய்க்கூடி
லல்லதுமூன்றுமங்சமாகியேயொன்றாய்க்கூடிற்
செல்லுறும்ராதித்தலத்திற்செங்கைதாடநத்திஞேசைக்
கல்லெனபரிமாரிசக்காரியைக்கலநதுவாழ்வன், (கசய)

இதுவுமது.

ஒன்றுநாலேழுக்குள்ளோனொன்றாகக்கூடினுலி
னின்றிடவொன்றாகவொன்றுநின்றவொடுபார்க்கநற்கா
லென்றராசியிலேநிற்கிலினியதேனும்பந்தத்
துன்றிடக்கலவிசெய்யுநதோகையைப்புணருவானே- (கசக)

இதுவுமது.

கிலயிற்றுரேசனுடன்குசன்கூடிநிற்கிற்
கிரந்தியுள்ளாளிராகுநிற்கிற்கடிகிரநதியுடையா
ளலகில்குளிகன்கூடினுல்விரணக்கிரந்தி
யடைந்தவளகாமத்தாநத்தருக்கனேனிற்கிற்
குலவுவருசன்கோபியற்பஞ்சாரன்றரித்திரன்
கூறுமவதாநத்தன்பொல்லாததேகன்
பலசுகவிரோதன்கொள்பாரிக்கேபகைவன்
பார்மன்னர்கோபத்தாற்பயனுடையனென்பார். (கசஉ)

மேற்படி பாவத்தில் மதினின்றபலன்

நவிலேழின்மதியிருக்கிற்றுட்சணியன்கநலா
னல்லுகளத்திரமுடையனவிலுறுய்ஸ்திரவசியன்
பதினிற்சஞ்சாரன்களத்திரத்தாலாபம்
போகபோக்கியமுடையன்சருவசநமித்ரன்
கவிநயனலங்காரனேழதனிற்செவ்வாய்
கலந்திருக்கிற்பாவகளத்திரங்கலகிரோகி
குவிகளத்திரவீரனுறுகளத்திரத்தாற்சேதங்
கூறுபயக்களத்திரமாங்களத்திரத்தாற்றுக்கம், (கசங)

புதன் னின்றபலன்.

தருமேழிற்புதனிருக்கிற்நராசயோகஞ்
சஞ்சாரகீர்த்திப்ரதாபனல்லதாநும்

பெருமையுள்ளபரியாசன்சமர்த்தனற்பபோகி
பேசுகல்விப்பிரசங்கன்றிரிவசனப்பிரிய
ன்றுமையுள்ளநல்லகுணசத்தியவான்சில
னுகியபுத்திரசோபன்காலத்திற்புத்திரான்
மருவியகந்நியர்மோகன்வார்த்தையில்வல்லவனு
மதநபாணத்தைநிகர்வாட்டடங்கண்மயிலே, (கசச)

குசன் நின்றபலன்,

குலவேழிற்குருவிருக்கில்யோககளத்திரமாங்
கூறுடையாபரணமலங்காரச்சுகமா
மிலகுதயிரியுங்காமியிதிர்குருத்துவேஷி
யிராசகந்நிகாலாபம்பிரசிததமுடைய
னலகில்பாக்கியமுடையன்புகழேழினிற்கி
லதிரூபன்சகமித்திரன்வெகுகாமிகலவிப்
பலமில்பரத்திரிகமநன்தன்மசிந்தைதியாகி
பகருபயகளத்திரமகம்பங்கயுப்பெணணேமுதே, (கசரு)

சநி நின்றபலன்,

திகழேழிற்சனியிருக்கிற்றரித்திரன்சஞ்சாரன்
தீககரோகத்தையுளன்சுமைசுமந்துதிரிவன்
புகல்பாவபுத்திசொற்பதநம்பொல்லாரூபப்
புன்செல்வநற்கருமம்பலவாகமங்க
ணிகரில்வயித்தியநீசக்கன்மிசநப்பகையு
நீடுசேவகன்வேசைனிகரானகளத்திரஞ்
சுகமில்களத்திரநாசங்களத்திராவமாநந்
துர்ப்புத்திமந்தமுளனற்புத்திரருளனே, (கசசு)

குரு நின்றபலன்,

மிகுமேழிலிராகுனிற்கிற்பரதாரகமநன்
வேசைதனைவிருத்தைதனைப்புணர்வன்றிரிமோகித்
த்கும்போகபோக்கியமாங்கொவியுதாசீநன்
சநவசியன்விபசாரத்துட்டகளததிரமாக்
தொகுமேழிற்கேதுனிற்கிற்றூரஸ்த்ரீகமநன்
சோம்பல்வஞ்சன்றூர்க்கன்மிசஞ்சாரமூர்க்கன்
றிகைப்படுங்களத்திரத்தனுபயகளத்திரமாஞ்
சிலுகுசொல்வன்களத்திரவழித்துக்கமுளன்றனே, (கசஎ)

குளிகன் நின்றபலன்,

காட்டுமாரேழிற்குளிகனேயிருக்கிற்களத்திரவீண்னேமாளிற்
கூட்டுறுசகலசநவிரோதங்கள்கூறுமேயழிலாத்தார
மீட்டுறுமந்தப்புத்தியன்கெர்விவிளங்கியகளத்திரத்துக்கன்
நீட்டுசெஞ்சிலைவேளினைமுஷியென்னப்புளகிதவனமுலையனமே. ()

சகிதாதிய பலன்.

ஏழினிற்குளி சுபவந்னேயிருக்கினெய்திடுமனேவியாற்கேடு
சூழிசையேழாமிடம்விருட்சிகமாய்ச்சுன்னிற்கிற்களத்திரநாசம்
வாழியவேழில்வளர்மதியிருக்கில்வாய்த்திடும்வெகுகளத்திரந்தா
ஞழவேயேழிலழகுமாலுற்றாலருண்முதற்களத்திரநாசம், (௧௪௧)

இதுவுமது,

ஏழாமிடத்திலேங்கெட்டுக்கிறைவர்னிற்கின்மனேவிமைந்தர்
மீளாதிரும்புத்ரரைப்பெறுவர்மின்னேழ்மகரங்கடகமதாய்த்
தாளாமதிசேய்தானிற்கிற்றயவாநல்லகளத்திரமா
மாளாச்சனியமபுவினிற்கின்மனேவிசேயகருநதோஷமுண்டே, (௧௫0

இதுவுமது,

மீனமேழிடமாய்க்காரிமேவலக்கினத்திற்பாநு
தானயந்திருக்கிலெய்துந்தாரமேநாசமாகும்
வானமாமேழில்வெள்ளிவக்கிரன்கூடினிற்கி
லானதோர்களத்ரநாசமென்றனர்கணிதமாய்ந்தோர், (௧௫௧)

விபசாரகளத்திரம்.

இலக்கினமேழீராறிலீட்டியபாவர்னிற்கிற்
றுலக்கியபுத்திரவீனன்சுக்கிரன்சனிசேய்கூடிற்
கலக்குறுமாட்சியாக்கிக்கருதுமேழிடமாய்நிற்கின்
விலக்குவர்தாசிமிக்கவிபசாரக்களத்ரமெய்தும். (௧௫௨)

இதுவுமது.

பாரத்தமேழுதன்னிற்பாநுவுமிராகுனிற்கிற்
றாரத்தாற்றநமேநாசந்தருங்கந்நியேழதாகி
வீரத்தாங்குருவேனிற்கின்மிகுநாவிற்பாவர்சேரில்
வாரத்தாங்களத்திரநாசம்வருஞ்சரோருகச்செந்தேனே. (௧௫௩

இதுவுமது,

அட்டமத்தோனேழாகிலன்னியமனேப்போசிப்பாந்
தொட்டதோர்தாரநாசஞ்சொல்லுவரிலக்கினேசன்
றிட்டமாமேழினிற்கிற்றிரவியங்கீர்த்திசெல்வ
மிட்டமுமுடையதாரமெய்திடுமினியதேனே. (௧௫௪

ஏழாம்பாவம்-முற்றிற்று.

---

## எட்டாமபாவம்.

ஆயுரு பலன்.

௧-வது-ஆண்டில்-அரிட்டம்,

ஏறுகோலெட்டாய்ப்பாவரிருக்கவேயிரவிபாக்கிற்
கூறுமோராண்டிற்சாவாங்கொழுங்கந்நிபாகையொன்றில
வீறுவெண்மதியனிற்கில்வெய்யவன்பார்க்கிலாண்டிற்
பேறுளமதலேசாவாம்பிறைநுதற்றடங்கண்மாதே. (௧௫௫

உ-வது ஆண்டில் அரிட்டம்.

வக்கிரமாகக்காரிமறிதேளாறெட்டாய்னிற்க
வுக்கிரச்செவ்வாய்பார்க்கவுடன்கூடவிரண்டாமாண்டிற்
புக்கிடுமதலைசாவாம்புகலுந்தேய்மதிகேந்திரிக்க
வக்கிரச்சனிசேய்பார்க்கிலரிட்டம்ரெண்டாண்டிலென்பார். (கருசு)

ங-வது ஆண்டில் அரிட்டம்.

எள்ளியசெவ்வாய்க்கெட்டாமிராசியில்வியாழனிற்க
வெள்ளிபாராதிருக்கமிகுபாவர்மதியைப்பார்க்கில்
வள்ளியமதலைநோயான்மாண்டிடுமூன்றுமாண்டிற்
றெள்ளியகணிதநூலோர்தெரிந்துரைசெய்தவாறே. (கருஎ)

ங-ச-வது ஆண்டில் அரிட்டம்.

பெற்றிடுமிலக்கினத்தோன்பெலவீனமூகப்பாவ
ருற்றிடமாந்திகேந்திரமூறிலாண்டுமூன்றிற்சாவாங்
கற்றபன்னிரண்டெட்டாறுய்க்கடகமாய்ப்புதனேனிற்க
நற்றியமதியும்பார்க்கினாலாண்டிலரிட்டந்தானே. (கருஅ)

ச-ரு-வது ஆண்டில் அரிட்டம்.

படிதுலாந்தன்னினாலாம்பாகையின்மதிதானிற்கக்
கொடியபாவக்கோளபார்க்கக்கூடினாலாண்டிற்சாவாந
துடியைந்திற்பாவர்னிற்கச்சுகர்மூடமாகப்பாவ
ரடியுறப்பெலக்கிலைந்தாமாண்டினிலரிட்டமாமே. (கருசு)

ரு-வது ஆண்டில் அரிட்டம்.

குருசனிமதிசேய்கூடிற்குலவைந்தாமாண்டிற்கண்ட
முருகுசேய்கேந்திரமேறமூர்த்தியோன்பலக்கேடாக
வருகுமோராறதிலெட்டின்மதிநிற்கவருடமைந்திற்
பெருகுமோர்குழவிக்கீநன்பேசுவர்பேதைமாதே. (கசுல)

ரு-சு-வது ஆண்டில் அரிட்டம்.

சிங்கத்திற்பாகையைந்திறதேய்மதினிறகப்பாவர்
பங்கத்திறகூடப்பார்க்கிறபகரைந்தாமாண்டிறசாவா
மங்கத்துக்கடகஞ்சிங்கவாறுபன்னிரண்டாய்வெளளித்
தங்குறறுனிறகப்பாவர்பிரக்கிலாறுண்டிறசாவாம் (கசுக)

எ-வது ஆண்டில் அரிட்டம்,

தாங்கியனிகளம்பட்சிசாப்பத்திரேகாணந்தோன்ற
வீங்கிவருடனேபாவரிருந்திடச்சாமிதானே
வோங்கிடப்பாராராகிலோரேழாமாண்டிற்சாவாம்
பூங்கிளியனையநீஞ்சொறபூவைக்கும்பூவையன்னாய் (கசுஉ)

இதுவமது

பார்க்கும்லக்கினத்தின்மூன்றிறபாலூர்கனிற்கவேழிற
கூர்க்குஞ்சத்தருவீடாககதுளிர்மதினிறகப்பொன்றோ

னோர்க்குநற்பார்வையற்றுலேழாண்டின்மரணமென்பர்
சேர்க்குறாற்புலமையோர்கடெரிநதுரைத்தனரிவ்வாறே. (கசுங)

அ-வது ஆண்டில்அரிட்டம்.

தேய்மதியுதயநிற்கச்சிறந்தநாலெட்டில்வெய்யோன்
வாய்மலர்ந்திருக்கிலெட்டாம்வருடத்திலரிட்டங்காட்டு
மாய்மதியிரவியேழிலாகத்தீங்கோட்கணோக்க
வேய்மகிழ்மூர்த்தியாம்போடிருக்கிலெட்டாண்டிற்சாவாம், (கசுச)

இதுவுமது

மறியினிலெட்டாம்பாகைமதிநிற்கப்பாவர்கூடப்
பிரியமாய்ப்பார்க்குமேனும்பெலமாந்திப்பவநகேது
சிறியராதுவுமேகேந்திரஞ்சேரிலெட்டாண்டிறிசாவா
மதியுற்றகோளேகூடிலரிட்டங்களவநதுதீரும், (கசுரு)

எ-அ-கூ-வது ஆண்டில் அரிட்டம்,

தூய்பலக்கினத்திற்செவ்வாய்சூரியன்மதியுங்கூடிச்
செய்யநற்கோளேபாராவிடிலெட்டாமாண்டிற்சாவா
மெய்யுங்கோலிடபமேழாமிடமர்த்தேய்மதியுநிற்க
வுய்யும்பொன்பார்க்கிலேழெட்டொன்பதாமாண்டிற்சாவாம் (கசுசா)

கூ-வது ஆண்டில் அரிட்டம்.

சந்திரன்மிதுநங்கர்நிதனினிற்கிற்செவ்வாய்பார்கக
வெந்திறநற்கோளபாராவிடிலொன்பானண்டிற்கண்ட
மூநதியமதிக்கிராறின்மூர்க்கிபோன்பாவியாகின்
வநதவம்புலியஙசத்தின்வரிலொன்பதாண்டிற்சாவாம். (கசுஎ)

இதுவுமது.

இடபத்திற்பாகைபொன்பானெழின்மதிநிற்கப்பாவர்
திடமுற்றுப்பார்க்கக்கூடிற்றெரிநதொன்பானண்டிற்சாவாந்
தடமுற்றவைந்திற்செவ்வாய்சநதிரனிரவினிற்க
வுடனற்கோள்பாராராகிலொன்பதாமாண்டிற்சாவாம் (கசுஅ)

ய-யக-வது ஆண்டில் அரிட்டம்.

மீனத்திற்பாகைபத்தில்வெண்மதிநிற்கப்பாவர்
நணுற்றுக்கூடப்பார்க்கிற்றகும்பத்தாம்வருடங்கண்டம்
ஊனுற்றுக்கதிரோன்றிங்கண்மாலவனுதயங்கூடிப்
பானுற்றபாவர்பார்க்கிற்பதினோராமாண்டிற்சாவாம் (கசுகூ)

யஉ-வது ஆண்டில் அரிட்டம்.

அருண்மதிசிங்கமேவவாதித்தன்சனியுமீந
மருவச்சுன்பாராதாகில்வருடம்பன்னிரண்டிற்சாவாஞ்
சருவுதேளங்கிசத்திற்சநிதுவாங்கிசமாய்நிற்க
வருகுருதானும்பார்க்கில்வருடத்திலரிட்டமாமே, (கஎ0)

௰ௗ-௰௪-வது ஆண்டில் அரிட்டம்.

சனிதுலாங்கிசமாய்நிற்கச்சற்குருபார்க்கப்பன்மூன்
றினிற்பிதுர்த்துவேஷியாகியிறநதிடுமதலையென்பார்
கனியும்பெண்ணங்கிசத்திற்காரிதனிற்கமாலோன்
வனியுறப்பாறகிறபன்னுல்வருடத்திலரிட்டமாமே. (௲௭க)

௰௫-௰௬-வது ஆண்டில் அரிட்டம்.

முடவன்சிங்காங்கிசத்தின்முறறிடவிராகுபார்க்கி
லிடர்பதினோந்தாமாணடிலெதிர்க்குஞ்சத்துருவாற்கண்டம்
படர்சநிகன்னியங்சம்பறறிடக்கேதுநோக்கின்
விடமதாய்ப்பதினாறண்டின்மேன்மகவரிட்டமாமே (௲௭௨)

க௭-௰அ-வது ஆண்டில் அரிட்டம்.

மிதுனவங்கிசத்திறகாரிமேவிடச்சாமிபார்க்கிற
சதுரசூரனுமாய்ப்போகிதானய்ப்பன்னேழிற்சாவா
மதுதுலாலககிநத்தோனட்டமங்கிரகமாறப்
பதுமப்பொன்பாரானுகிறபதினெட்டாமாணடிறசாவாம். (௲௭௩)

க௯-வது ஆண்டில் அரிட்டம்.

மந்திரியங்கிசத்தின்மநதனுமிராகுங்கூடிச்
சொநதமூர்த்தியினைப்பார்க்கிறமூன்றுசேயுடனேகண்டந்
தநதலககிநத்தோனுச்சந்தானேறிப்பெலவானுகிற
பங்கெனுமூலையினுளேபத்தொன்பதாண்டிறசாவாம். (௲௭௪)

உ௰-வது-ஆண்டில் அரிட்டம்.

கேநதிரம்பாவர்நிறபக்கிளர்சுபர்பாராராகச்
சாய்ந்தசந்திரனுறெட்டிறசாரிலாண்டிருபதிறசா
மேய்ந்தபொன்னிரவிகூடவிலக்கிநத்திருப்பவேதா
னுய்ந்தகேந்திரன்கேந்திரிககிலாண்டிருபதனிறசாவாம். (௲௭௫)

க௨.க௭-௨௨-௨௫-௩௨-வது ஆண்டில் அரிட்டம்

பெருகுமட்டமத்தோன்கேந்திரம்பெலக்கவேவிலக்கிநத்தோன்
வருபெலவீனமாகவறைந்திடின்வடிவேறகணனு
யொருபனிரண்டுபன்னேழொரிருபத்திரண்டா
மிருபத்தைந்தல்லான்முப்பத்திரண்டினின்மரணமாமே. (௲௭௬)

உ௭-௰௬-வது ஆண்டில் அரிட்டம்.

கொநியில்சத்துருக்கோட்கோணகேந்திரஞ்சனியேநிற்க
வெதிரவிநறகோணிறகினிருபத்தேழாண்டிறசாவா
மதியுஞ்சேயருக்கன்கேந்திரமாகிறபத்தாண்டிறகண்ட
மதியகேந்திரிக்கிறகண்டம்வரும்பத்தொடொன்பதாண்டில். (௲௭௭)

உ௮-உ௬-வது ஆண்டில் அரிட்டம்.

அட்டமத்தோனேவேந்தனம்புடன்பார்க்கச்சாமி
யெட்டினிறிருப்பானுகிலிருபத்தெட்டாண்டிறகண்டஞ்

சட்டவெண்மதியருக்கன்சநியெட்டிலிருக்கல்லோ
ரிட்டமாய்ப்பாராகிலிருபத்தொன்பானிற்கண்டம் ௲அ

உஎ-கூ௰-வது-ஆண்டில் அரிட்டம்.

சாலமிகுமட்டமத்தோன்சாயிக்குருடுவேதிங்கள்
பெலமிகுந்துற்றுநிற்கப்பொன்னுன்பாக்கியத்தினிற்கி
லிலகியவிருபத்தேழின்மேன்மூப்பதாண்டிற்சாவாங்
கலகவேல்விழியினாளேகணிதநூலுரைத்தவாறே, தஎகூ

மாதாபிதாக்களுடன் அநுமரணம்.

நாட்டுங்கீர்த்தியன்பெலக்காலொன்பதுடையோர்மாந்தி
யீட்டராச்சநிசேய்கூடியெட்டிற்பன்னிரண்டிலாறிற்
கூட்டுறநிற்பராகிற்குலமகன்றோன்றப்பின்னு
ளூட்டுமாதாபிதாவுமுடன்மரணந்தானென்பர் தஅ௰

மரணஹேது

திருவளர்செவ்வாய்நாலிற்றேய்மதிபத்திநிற்க
வருசநிபார்க்கப்பட்டான்மரத்தேறிவீழ்ந்துசாவன்
றருநாலிலிரவிநிற்பச்சாயமதிசேய்பத்தாகப்
பொருசநிநோக்கிற்காய்நதேபெலாமரத்தேறிவீழ்வன் தஅக

இதுவுமது.

ஒன்பதிலேந்திற்பாவருமைந்திடச்சுபர்நோக்காரே
லன்புடன்கடிதாயோடிமரத்தேறிவீழ்ந்துமாய்வ
னின்பமாங்கதிரோனலிலெட்டினிற்குளிகனிற்கிற
முன்பருமரத்திலேறித்தபரியேவீழ்ந்துசாவன்

இதுவுமது

கூறியமதியொன்பானிற்கொழுங்கதிரஞ்சினிற்ப
வீறியசநிசெவ்வாயுமிக்ககேந்திரத்தினிற்கின்
மாறியவிருட்சம்வீழ்ந்துமரணமேயாவர்திண்ணஞ்
சீறியவரவைத்தேரைச்சிறப்பியவல்குலாளே தஅகூ

இதுவுமது.

குறியொருநாலிற்சேயுங்கூர்பத்திற்பானுநிறகி
லெறிக்கல்லினாலும்வெற்பிலேறியேவீழ்ந்துசாவா
னெறியெட்டோன்றிரிகோணத்தினிலன்சேயிரவிநிங்க
ளூறிலெறினும்வெறியுங்கல்லாலுருண்டுவீழ்ந்துடனேமாள்வன், தஅச

இதுவுமது.

ஒருநாலோன்சநியிராகுவுடன்கூடநாலிறசெவ்வாய்
தருவெய்யோனிறகவேழோன்றமூவிறகல்லெறிமாறசாவன்
பொருநாலிறசநியுமேழிறபூமனும்பத்திறபாநு
மருவுறுகிணறறில்வீழ்ந்துமரணமேயாவன்மின்னே தஅரு

இதுவுமது.

ஏழில்வெண்மதியுநாலிலிருஞ்சநிபத்திறசெவ்வாய்
சூழின்மாக்கிணறறில்வீழ்ந்துதுன்மரணத்தாறசாவ

கீழ்கிணுலின்மூடநீசக்கோளிருக்கப்பாவுர்
கேழுற்றேணுக்குண்டாகிறகிணறறினில்விழ்ந்துசாவன் தஅகூ

இதுவுமது

தண்ணமாகாலாம்வீட்டிறசநிசெவ்வாய்மதியுநிறக
வண்ணமாககுளிகனெட்டின்மீருவிடிறகிணறற்றசாவ
னெண்ணமிலொன்றேடெட்டுகைகிறையவருடனேவெள்ளி
திண்ணமாய்க்கூடிநின்றுறறிரியிணுன்மரணமாவன் தஅள

இதுவுமது

சாமிகும்பாங்கிசத்திறசார்ந்திடிறறிரியாறகண்டஞ்
சேமிலாறேனைப்பாநுசேரிறறுன்மரணமாகும்
காமியவெளளிசெல்வாய்காரிமால்குருவுங்கூடிற
றேமிலாவுலகோாகாணத்துன்மரணத்தான்மாய்வன் தஅஅ

இதுவுமது

பாரினிலோரரெட்டிறபனிரண்டின்மதியுநிறகக்
கூறியசநியும்பாம்புங்குளிகனுமொன்றுய்க்கூட
கேரினிறசாமிபார்க்கினிமிடத்தின்மரணமாவன்
பேரினிறகணிதநூலோர்பிரித்துரைசெய்தவாறே தஅசு

இதுவுமது

விலகுமொன்றெட்டுக்குள்ளோர்வியமேறக்கோதிரமேறக்
குலவுதுர்ப்பலமாய்ச்சாமிகூடிறறுன்மரணமாவ
ணுல்விலக்கிநத்திறகாரியுறவேழிறபாம்புநிறக
வலகுகந்நியிறசுன்னிறகிலாயுதமரணமாவன் தசூ

இதுவுமது

இரவிசேய்கிரகமாறவெட்டுளோன்கேந்திரகோணந்
திரமுறப்புவியின்மன்னர்சினத்தாலாயுதத்தான்மாள்வன்
பரவுமீனுதயமாகப்பாநுமதியுநிறகிற
றருமமில்பாவர்பார்க்கிறதண்ணீரில்வீழ்ந்துசாவன் தசுக

இதுவுமது

நீனுபயத்திறபாநுநீசர்கணிறகப்பாவர்
தானுறப்பார்க்ககூடத்தண்ணீரில்வீழ்ந்துசாவன்
மீனுங்கர்க்கடகாலாய்வெஞ்சநிநிறகுமேனும
லாழுஞ்சத்ரோசன்றன்னைமதிகூடிறசலத்தாறகண்டம் [illegible]

இதுவுமது

இலககிநத்தன்னிறறிங்களிரவியுநிறகவேதான்
கலக்குநாலுபயாதன்னிறகாரிதானுறைவதாகிற
லக்குறமுதலையாலேதான்மாய்வன்குளிகனங்கம்
பெலக்கும்வீட்டினுக்கேழாய்த்தேய்ப்பிறைநிறகிறசலத்தாறகண்டம்

இதுவுமது.

ஆதித்தனுதயநிறபவம்புரிகந்நியாகப்
பேதித்துப்பாவர்கூடிறபெருகியசலத்தாறகண்டஞ்

சோதித்தவுதயந்திங்கள் சுடர்நிற்கவுதயமாலைச்
சாதித்தபாலர்கூடிற்சலத்தினின்மரணமாவன் ௲௯௪

இதுவுமது

சயமதிதன்னைச்செவ்வாய்சநிராகுகேதுகூடிற்
பயமிகுவருத்தமாகிப்பசாசுபீடையினிறக்கண்டம்
வயமிரண்டினிறபெலந்தான்மாலைபாருடையோன்பார்க்கிற்
செயமிகுபோரிலுத்தஞ்செய்துதான்மரணமாவன். ௲௯௫

இதுவுமது

சேர்க்குமொன்றெட்டுளோர்கள் பெலவீநமுறமூன்றனைச்
சேர்க்குஞ்சேய்கூடப்பார்க்கிற்செருச்செய்துமரணமாவன்
கூர்க்குமூன்றுடையோன்செவ்வாய்குளிகனுங்கூடியாறெட்
டேர்க்குநிற்பராசியிலெதிர்ச்சண்டைமுகத்தில்வீவன். ௲௯௬

இதுவுமது

வசையிறேண்மேடாங்கசத்தில்வன்சநியிருக்கக்காரி
யிசைதிரேகாணன்றன்னையிருஞ்செவ்வாய்கூடப்பார்க்க
வசையில்ராவிக்கோள்செவ்வாயிடக்கிரகமாற
விசயமாம்போர்க்களத்தில்வீவதுதிண்ணமாதே ௲௯௭

இதுவுமது

குறிக்குமொன்றெட்டுளோனைக்குசன்கூடியெட்டினிற்கி
லறிக்கையாம்ரணக்களத்திலாயுதமரணமாவன்
பறிக்குஞ்சத்ரோசன்றன்னைப்பாவர்சேய்கூடப்பார்க்கிற்
செறிக்கும்போர்க்களத்தின்மாய்வன்சேயரிக்கருங்கண்மாதே [illegible]

இதுவுமது

ஈட்டியமகரகும்பமெட்டாகப்பாவரோடே
காட்டியமதியுநிற்கிற்கயிற்றினான்மரணமாவன்
கூட்டியபிறையைக்காரிகூடிக்கேந்திரிக்கப்பாவர்
வாட்டியேநெருக்கின்மாதேவன்கயிறதனான்மாள்வன் ௲௯௯

இதுவுமது

அஞ்சுமூன்றொன்றுளோர்களரவுடன்கூடுமாகிற்
றஞ்சுவர்கயிற்றினாலேசொல்லியமகரகும்பம்
விஞ்சுநாலிடமாயத்திங்கண்மிருபாவருடனேகூடிற்
பஞ்சின்மெல்லடியாய்கேளாய்பருங்கயிறதனான்மாய்வன் ௲௱

இதுவுமது

எட்டுளான்சராய்ராகுவிராசனுமிருக்கவல்லாற்
றட்டுறுமிரர்குவைந்திற்சநியெட்டினுமிற்செவ்வா
யட்டுறநிற்குமேனுமைந்தொன்பான்றன்னிற்பாவர்
கட்டுறச்சாமிபார்க்கிற்கயிறதினான்மரணமென்னே ௲௱௧

இதுவுமது

உதயமேற்சநியோனைந்திலொண்கதிரொன்பான்செவ்வாய்
புதைவுறுமதியம்பத்திற்பொருந்திடிற்கயிற்றான்மாள்வன்

கன்னிசேயட்டமத்தோனங்சக்காரிமாமதியுங்கூட்ச்
சினியுமம்புலியைச்சாமிதிருட்டிக்கினுணிகொள்வன் தா௨

இதுவுமது

வட்டவெண்மதிக்கைக்தொன்பான்வனபவரிருக்கப்பார்க்க
வட்டமத்திரோகாணேசனதிபாவியாகிப்பார்க்கில்
விட்டதோர்வினைப்பயத்தால்விரைவுடனணிக்கொள்வ
னிட்டமாங்கொவ்வைச்செவ்வாயேந்திளங்கொங்கைமாதே தா௩

இதுவுமது

உச்சநீர்க்சிழிர்பாருறைந்திடக்கோணகேந்திர
மச்சுறசசாமிசேயோடணிபெறச்சநியன்பாக்கிற்
குச்சமாய்நாணிக்கொள்வான்குளிகனங்கிசராசிக்கு
நிச்சயமேழிற்காரிநிற்கிற்சோரர்களான்மாய்வன் தா௪

இதுவுமது.

தகுமிலக்கிநத்திற்றிங்கள்சாற்றெட்டில்வருமார்த்தாண்டன்
மிகுபலவீனமாகவியத்திற்பொன்னவன்விளங்க
நகுமொருநாலிற்பாவாநாட்டமாய்க்கூட்டமாகிற்
றெருகுதியாமிராக்காலத்திற்சோரரான்மரணமாவன் தா௫

இதுவுமது,

விருட்சிகமேடநாலாமிடமாகமதியினோடே
யெரித்தெழுபாவர்நிற்கினிரத்தமூலத்தான்மாய்வன்
றெரித்தெழுவெள்ளியெட்டிற்றெளிவொடுகூடப்பார்க்க
வரித்திடுபிரமேகத்தாலங்கமேயுருகிமாய்வன் தா௬

இதுவுமது.

அடைவுறுசாமிபாவரங்கிசமாகவாறெட்
டுடையவர்பார்ப்பாராகிலுருதுறஞ்சுவாசகாசத்
திடையுறுமீளைசூலையிருமலான்மெலிந்துமாய்வன்
படைநெடுங்கதிர்வேற்கண்ணாய்பகர்ந்தனர்கணிதநூலோர் தா௭

இதுவுமது,

ஓங்கியமிதுனாங்சத்திலுதயத்தோனுறைந்துநிற்கத்
தேங்கியவாறெட்டுள்ளோர்திருட்டியுண்டாகுமாயின்
வீங்கியகபாலசூலைமேலவரொவர்பார்த்தாலு
மேங்கியேமரணமாவனென்றனர்கணிதநூலோர் தா௮

இதுவுமது,

இவர்தருகோலிற்செவ்வாயிடபத்திலிரவிநிற்கத்
தவறிலாமகரகும்பந்தன்னிலம்புலிதான்மேவிற்
குவலயமயக்குங்கண்ணாய்கொடுநரகக்குழிக்கு
ளவகேடதாகவிழ்ந்தேயவிடத்தின்மரணமாவன் தா௯

இதுவுமது

குளிகனங்கிசத்தோனுக்கேகூறெழிற்சுபர்பெலக்க
வொழியுங்கேந்திரத்தினறுகோணுறுதியாய்நிற்கவன்னோர்

ழியுறப்பார்ப்பாராயின்வருந்திமாயுள்சென்றே
யழியுநாள்வருங்காலத்திலப்பாசமரணமாவன். ௲௰

இதுவுமது.

படவரவெட்டினிற்பப்பூட்டோன்பாவியாகித்
திடமொடுபார்ப்பானுகிற்றேகத்தில்விரணமீறி
யுடலெல்லாம்புழுத்துகொண்டேயுலைந்தெச்சிற்கலையில்வீழ்ந்து
தடவிநின்றுழன்றுமாய்வன்றமைமுகத்திலுளே. ௲௰௧

இதுவுமது.

நோக்குற்றமதியுமொன்றினுவல்கதிரெட்டிலாகில்
வீக்குற்றபெலங்கேடாகவியதன்மந்திரியுமேவத்
தாக்குற்றநாலிற்செவ்வாய்சனியுடன்கூடினிற்கிற்
றாககத்திலுருண்டுவீழ்ந்தேதுடித்துடன்மரணமாவன், ௲௰௨

இதுவுமது.

ஆற்றிபசாமியெட்டிலங்கிசமாகவல்லார்
சாற்றியமூடமாகிச்சத்துருக்காகநிற்கி
லேற்றியபந்தூற்றோர்களில்லாதவிடத்திலேதான்
றேற்றியபசிதாகந்தாற்சோபத்தான்மரணமாவன். ௲௰௩

இதுவுமது.

பையவேயெட்டிற்கனிபத்திற்றேய்மதியுநாலில்
வெய்யவன்றனுநிற்கில்விறகுக்கட்டாலேசாவன்
செய்யகேந்திரத்தாகத்திற்றேய்மதிநிற்கநீல
னையுறப்பார்க்கின்மாதேபாசவியாதிசொல்லும், ௲௰௪

இதுவுமது

கன்னிபங்கிசத்திற்சாமிகலந்திடலாறெட்டுள்ளோர்
துன்னியபாவியாகித்துணைணைப்பார்ப்பாராகி
லுன்னியகுய்யரோகமுராமேவதனையான்மாய்வன்
பன்னியகணிதநூற்பாவலருரைத்தவாறே, ௲௰௫

இதுவுமது.

உரைத்திடுமுதயமைந்தொன்பதிற்கதி
ரிரைத்தெழுகுசன்மதியிருக்கவெட்டினிற்
கரைத்திங்களியுறிர்கனன்றுசீறியே
குன்றுகுவிதழுருமலியிற்குலைத்துமாளவனே. ௲௰௬

இதுவுமது,

இயங்கிபமேடந்தேளேயிலககிராங்கிசமதாகத்
தியங்குலககிரந்தானுகத்தேய்மதிபாநுநிற்க
லயங்குலைத்திற்பாம்புமாலுமேகூடிநின்றுற்
றயங்கியவயிறுதன்னைத்தான்பீறிக்கொண்டுமாய்வன். ௲௰௭

இதுவுமது,

வனித்கலக்கிநத்திற்காரிமலிவுறச்சுபரோபார்ககச்
சினத்தாருடனுதித்தன்றேய்மதிகூடிநிற்கிற்

குனித்துறுவயிற்றைப்பிறிக்கொண்டுதான்மரணமாவன்
பனித்துளிதுளிக்குஞ்செம்பொற்பங்கயமுகத்தினளே, ௧௧௧௯

இதுவுமது.

மங்கலனலினிற்கவன்கதிரைந்தின்மேவப்
பங்கஞ்சேய்சனிபத்தாகப்பதேதோனைச்சாமிகூடிற்
சங்கையாற்சூலவண்டிநன்னிலேயிறுக்கிக்கட்டி
யங்கமேற்சதைதயைக்கொய்தேயருந்தெனக்கொடுப்பன்கண்டாய், ()

இதுவுமது.

வண்பத்திலிரவிநாலில்வக்கிரனிருக்குமேனுந்
திண்பெறககதிரோனேந்திறமேறய்மதியுடனேகூடப்
பண்புறப்பாவர்பார்க்கிற்பரித்துவாகனமேலேறி
நண்புறத்தனையில்வீழ்ந்தேதங்கிமேயமரணமாவன், ௧௧௨௰

இதுவுமது

தனமதிற்சநியுநாலிற்சந்திரன்பத்திற்சேயுங்
கனமுடனிற்கில்வாகனத்தேறிவீழ்ந்துசாவன்
வனவசத்துருத்தானத்தோன்வன்சநியாம்பைச்கூடி
வினவியேபார்க்கினுங்கான்மிருகத்தான்மரணமாவன். ௧௧௨௧

இதுவுமது

குருவுஞ்சத்துருவிட்டோனுங்கூடவேயெட்டிற்பாருஞ்
சருவுறப்பார்க்கிலயானைதனிலேறிவீழ்ந்துமாய்வன்
வருமாறுக்குடையோன்காரிமதிரவிதன்னைக்கூடின்
வெருவிநாய்கடியான்மாய்வன்வெண்மதிமுகத்தினளே. ௧௧௨௨

இதுவுமது

சத்துருத்தானத்தோனுஞ்சநிரவிசெவ்வாய்கூடி
யொத்துடனிற்பாராகிலொண்கலேபாய்ந்துவாய்வன்
வைத்தமூன்றுடையோனோடேமாச்சநிவெளளிசேரி
னத்துறுவழியினிற்பேய்நாய்கடியாலேமாய்வன்- ௧௧௨௩

இதுவுமது

வாக்குத்தானத்திலேனும்வாகேசன்றன்னோடேனு
மாக்கும்வெஞ்சநியன்கூடவட்டமாதிபனேபார்க்கிற்
றேக்குநாற்பாதைமீதேசினத்தநாய்கடியாற்கண்டம்
வீக்குங்குஞ்சரத்தைவெற்பைவேறுசெய்தனத்தினளே. ௧௧௨௪

இதுவுமது

செருக்கிலக்கினத்தினுந்திரேகாணம்பிறக்கப்பாவர்
தருக்குறநோக்கிலுச்சந்தலேவிரண்டத்தாற்கண்டங்
கருக்கிரண்டாந்திரேகாணங்கழுத்தின்கீழரைமேனேயாம்
மருககுமூன்றாந்திரேகாணமரைக்குக்கீழ்விரணகண்டம். ௧௧௨௫

இதுவுமது

கன்னியிற்றீககோணங்கோள்சலந்தூரச்சநியுங்கூடிற்
றுன்னிலேயிரத்தகாசத்தலேதியேவீழ்ந்துமாய்வன்

மன்னியசாமிபாவர்மத்தியங்கேந்திரிகத்
தன்னிறக்கோளெட்டாகிற்றாயகோபத்தாலேமாய்வன். ௲௧௨௬

இதுவுமது

செய்யவனுலிவேழிற்செங்கதிர்பத்திற்காரி
யையுறலின்றியுற்றாலர்சன்கோபத்தாற்கண்ட
மெய்யுறுகுளிகனஞ்சவிராசிக்கோரேழுதன்னி
லையுறுமதியமுற்றால்ராசகோபத்தாற்சாவன். ௲௧௨௭

இதுவுமது

கோலிற்சேயாடாதித்தன்குடமகரத்திலிந்தும்
பாலித்துநிற்கிற்றாரேப்பாட்டினன்மரணமெய்து
மாலித்தமதியம்பத்திலழுக்கனேழ்நாலிதசெவ்வாய்
சோலிக்கவிருக்கின்மாதேசொல்லுநீர்ப்பாட்டாற்கண்டம். ௲௧௨௮

இதுவுமது.

உள்ளுநாலெட்டோர்கூடியோராறிலிருககுமேனும்
விள்ளுமட்டமத்தோன்வேந்தன்மிக்கலக்கினத்தோன்றானுந்
தள்ளுறாதொன்க்கூடிசசத்துருத்தானதிற்கி
லெள்ளுறுசிரணத்தாலேங்கியேமரணமாவன். ௲௧௨௯

இதுவுமது,

ஏழுநாலிரண்டிக்குள்ளோரெட்டுளோன்றன்னைக்கூடி
வீழுறவாறினிமதின்மீறசிரணத்தாற்கண்ட
மாழுறுஞ்சாமிநாலோனர்தனைனென்றாய்க்கூடிற்
கோளுறும்சிரணத்தாற்கோதையேமரணமாவன். ௲௧௩௰

இதுவுமது,

ஏறியநாலுமூன்றேடிரண்டிளோரொன்றாய்க்கூடி
யாறினிலிருக்குமேனுமருக்கன்சேய்நாலினிற்கக்
கூறியசநியுமிந்துங்கூடியேயெட்டின்மேவின்
மீறியவசிரணத்தான்மெய்யறிவழிந்துவீவன். ௲௧௩௧

இதுவுமது,

இயம்பியநாலுபத்தோடெட்டிற்றேய்மதியுமேவச்
சயம்பெறுசெவ்வாய்ராகுசநிகூடின்மூயலகன்றால்
வியம்பெறுமரணமுண்டாமிகுநற்கோள்கூடப்பார்க்கி
லயம்பெறுமின்னேய்த்தானேயடிக்கடிவந்துதோன்றும். ௲௧௩௨

இதுவுமது

எட்டிநிஞ்சூரமதாகவெட்டுளோன்சநியைக்கூடி
விட்டிநமுபயமேவில்விடிலாவெளியில்வீவன்
றட்டிடுமுபயமெட்டாய்ச்சநியெட்டோன்றன்னைச்சார்ந்தே
யட்டிடுசரத்திலெய்தில்வனத்திலேமரணமென்னும் ௲௧௩௩

இதுவுமது.

தவாவிலக்கினவியத்திற்றயகன்சேயிருக்குமேனு
மவாவுறுமேழிற்றிங்களருக்கன்மால்கூடுமேனுஞ்

நெறிக்குமூன்றுடையோன்கேதைச்சேரினுமொன்றுமூன்றுக்
குறித்தவர்சநியைக்கூடியுறைந்திடில்விடத்தையுண்பன் ௲௪௨

இதுவுமது

பகிரண்டிடத்தோனங்சபதிசநியுடனேகூடி
திகழ்வியமாறெட்டேயதச்சிகிமார்திபார்க்குமேனு
நிகர்மூன்றிற்குளிகன்மூன்றேனீனுமாறெட்டிற்றனு
மகராலிடமாய்ப்பாவர்மருவினும்விடத்தையுண்பான் ௲௪௩

இதுவுமது

புத்துணைசிகியைமூன்றேன்பொருந்தியேகூடிசேனு
சத்துருவர்க்கமேறித்தயங்கினுஞ்சாமிகானே
மெத்துஞ்சிங்காங்கிசத்தில்மேவினும்விடத்தையுண்பன்
கொத்தலர்குழலினளேகூறினர்கணிதநூலோர் ௲௪௪

இதுவுமது

சோதிபூராடங்கேட்டைசொல்லியவிசாகமோணங்
கிதிலாச்சதயந்தீதிலுத்திரட்டாதியிற்கே
சோதியசநியுத்திராடத்துறவியையொன்றுமூன்றேழ்
காதியவெட்டுமாகிற்கம்விடமுண்டுமாய்வன் ௲௪௫

இதுவுமது

சிகியெட்டிலிருக்குமேனுந்தேய்மதிசநியினோடே
விகிதமாவெட்டினின்றால்வெம்மையாற்பீடையுண்டா
மகிலமேலாறுமாறுக்கதிபனுங்கேதுவர்க்கம்
புகிலுறுபசாசுபீடைப்பொருந்தியேமரணமாவன் ௲௪௬

இதுவுமது

குசனிலக்கினத்துளாகக்கொடியசத்துருவேகாரி
வசமுறக்கூடிப்பத்தின்மதநத்திலிருக்குமேனு
நிசவிலக்கிநநற்பாநுநீலன்சேயிருக்குமேனு
மசலத்தைப்பொருந்தநத்தாயலகைவாதனையான்மாய்வன் ( )

இதுவுமது.

தரணியனுடனேபாம்புஞ்சநிகூடிமூடமாக
வரணிப்பாயெட்டோன்பார்க்கிரவினன்மரணமெய்து
முரணிலாவொன்றெட்டுள்ளோராமூக்கமாய்ப்பாம்பைக்கூடி
னிரணியநிறத்தினளேயிறப்பனேசர்ப்பத்தாலே ௲௪௮

இதுவுமது

ஓரையிலிராகுவேனுமொழிகேதுபவநனேனு
மீரையாய்நிற்கப்பாவர்வெகுண்டுதான்பார்க்குமேனும்
போரையேவிளைக்குமாறேன்புகலுதயத்தோன்பார்த்தாற்
றூரைமாவிராகுகூடிற்சர்ப்பபீடையினன்மாய்வன். ௲௪௯

இதுவுமது

இயலாகுமாறிலெட்டிலிராகுறமூன்றுளோனைச்
சயராகுபவனன்கூடிற்சர்ப்பபீடையினற்கண்டுஞ்
செயமேடத்தேனெட்டாகச்சேய்சநிபாம்புங்கூடிற்
பயமாகும்விடத்தீட்டத்தாற்பாரினிலிறப்பன்மின்னே. ௲௫௰

இதுவுமது.

விரிச்சிடுமிலக்கினத்தில்ராகுமேவிடச்சநியுங்கேதுங்
கொதிகருமட்டத்தோன்றன்னைக்கூடியேவிபத்தைதச்சாரச்
சதிகுமாறிடத்தோன்பார்க்கிறசாப்பபீடையிலுண்டாய்வன்
றுதிக்கும்வெண்மதியைப்போலுந்துலங்கியமுகத்தினளே [illegible]

இதுவுமது.

ஆசுறுமாந்தியங்கீழிராசிக்கோளருக்கனெட்டிற்
றேசில்பாம்பிருக்கச்சாமிசிங்காங்சஞ்சேர்ந்திட்டாலு
நீசமாய்ப்பெலவீநத்தானின்றிடநற்கோளெல்லாம்
பேசியபாவமெல்லாம்பெலத்திடிற்சர்ப்பகண்டம் ௲௧௫௨

இதுவுமது.

படர்நாலிலிரவிசெம்பொன்பத்தினிற்காரியெட்டி
லடருவாமதியுநிற்கிலாயுகமரணமெய்துந்
தடமுறுமொன்றுபத்திற்சநியுமவேழிறபாநு
மிடமுறுநாலிற்செவ்வாயிருக்கிலாயுதத்தால்விலன். ௲௧௫௩

இதுவுமது.

வருமிலக்கினத்திலேதான்மதிநிற்கவெட்டில்வெய்யோன்
பெருமையாம்வியத்தில்வேந்தன்பெலவீநமாகிமேவ
விருமையாய்நாலிற்பாவரோதுவர்க்கூடுவாரேற்
கருவியின்விரணத்தாலேகலங்கியேமரணமாவன் ௲௧௫௪

இதுவுமது.

பிணங்குங்கேந்திரத்தோன்சாமிபெலவீநமாகவாறுக்
கிணங்கினோன்சேயைக்கூடியியற்கருவியினாற்கண்டம்
வணங்குமட்டமத்தில்வெய்யோன்மலிவுறநாடிக்குள்ளே
யணங்குகேண்மதலேதோன்றிலக்கினிவிடத்தாற்கண்டம் ௲௧௫௫

இதுவுமது.

ஏழெட்டுக்குடையோர்மாந்தியிராகுவைச்சநியைக்கூடி
யாழுற்றவாழினிற்கிலவன்றிசையபகாரத்திற
கோளுற்றசோராராலேகூறுமாயுத்தாற்கண்டம்
வாளொத்தகண்ணினளேமலராயன்வகுத்தவாறே ௲௧௫௬

இதுவுமது.

அலகுசேயிராகுகாரியமருந்தேய்மதியுங்கூடிப்
பலமிறார்த்தாநமேவிற்பசாசுபீடையினாற்சாவ
னலனில்சுன்னரவுமெட்டினணைனுறிற்பசாசிலாதல்
குலவியவிஷத்திலாதல்கொடியதுன்மரணமாவன் ௲௧௫௭

இதுவுமது.

நாலுபத்தெட்டிற்றீக்கோணற்கோளுங்கூடிநிற்கிற்
றோலுந்தீக்கோட்களெல்லாங்கொடிதாகப்பார்த்திட்டாலு

நாலுறுமிலக்கினத்தோன்மகரஞ்சமாகப்பாவர்
மேலுறுப்பார்க்கின்மாதேவெய்யவாயுதத்தான்மாய்வன், ககருஅ

இதுவுமது.

பாயுறுமதிசெவ்வாயும்பாவமத்தியத்திலுச்ச
மாயிடுமேனுஞ்சாமியூணதேளஞ்சமாகச்
சாயுறுபார்க்கிற்றடக்கையாயுதக்காற்சாவன்
வேயுறுதோளிணலவேதநூல்விதித்தவாறே, ககருகூ

இதுவுமது.

வளைக்குமெட்டுடையோன்பாவவர்க்கமாய்க்குருராஞ்சத்திற்
றழைத்திடவெள்ளிதிங்கடன்னுடன்கூடியாறின்
முளைத்திடிற்சலத்தினுலுமுறைக்குளிர்காச்சலாலு
மிளைத்திடுமரணமாவனிலங்குறுங்கயம்பூந்தேனே. ககசுய

இதுவுமது,

உன்னியவிலக்கினத்திலொன்சநி[illegible]க்கவெட்டிற்
பன்னியராகுகூடப்பார்த்திடவெ[illegible]கன்னி
தன்னிலேயதிகநீசஞ்சாரத்தேய்[illegible]யுமாகிற்
கன்னியேமாறுகாலன்கையுமேயறுப்புண்பானே, ககசுக

இதுவுமது

மேடநேதனுதயமாகவெய்யவன்செவ்வாய்ராகு
கூடவேயிருக்கச்சேய்பொன்கூடச்சேர்ந்திடவஞ்சத்தி
லீடழியுவர்க்காலத்திலெல்லின்மகந்தோன்றுமாகிற்
றேடவன்றிசைபொசிப்பிற்றேகமேபுளப்புண்பானே. ககசுஉ

அவமான பலன்,

கடுஞ்சனியுதயமாகக்கதிரவன்மதியிராகு
வடுந்தனியுதயத்தாகவன்றிவேறிடத்திலாத
லொடுங்கியேநிற்பாராகிலுயர்தலைவறுப்புண்பானும்
விடுஞ்சுடர்நெடுவேற்கண்ணாய்விளம்பினர்கணிதத்தோரே, ககசுங

இதுவுமது.

பணபரமாறுக்குள்ளோர்பரிதொன்றாய்க்கூடிமேடங்
குணமுறவிருட்சிகத்திற்குலவியேநிற்பாராகி
லணிவெகுண்டிரண்டுகாதுமடிக்கடியறுப்புண்பானும்
பணையரவல்குன்மாதேபகர்ந்தனர்கணிதநூலோர், ககசுச

இதுவுமது

கும்பமேயுதயமாகக்கூறியமீநந்தன்னில்
வெம்பியபுதனீசத்தைமேவிடப்பாம்புகூடி
லம்புவிதனிற்காலூனமாகவேபிறப்பன்கண்டாய்
செம்பதுமப்பூவென்னச்சிறந்திடுமுகத்தினளே, ககசுரு

இதுவுமது

ஒன்பதுக்குடையோன்மூன்றிலுறைந்திடக்கேந்திரத்தோ
னின்பமாம்பத்தின்மேவிலிரக்கமில்குருடனாகி

வன்புளகுருதுகள்ளம்வஞ்சனையுடையோனாகித்
துன்பமாரிலகிலுள்ளோர் தூழிக்கவிருப்பன்மின்னே, கககூக

இதுவமது,

உந்தியவைந்திராறுக்குடையவரொன்றுப்க்கூடச்
சந்திரனிருந்தாட்குத்தானிருபத்திரண்டாய்
வந்தாரானுடையோன்கூடின்மலையிற்கோபுரத்திற்கம்பம்
விந்தையாய்நாட்யமாடும்வித்தைகளுடையனாமே, கககூஎ

திசைமாரகம்.

நீசன்றிசைமூன்றுநாலுமேலன்றிசைகாலாயிடினும்
பூசல்ராகுசேய்மூடமபூண்டோர்திசையைத்தாயிடினுஞ்
சேசிலாருந்திசைகுருவின்றிசையேயேனுஞ்சத்துருவோ
னுசிற்றிசையேழாயிடினுமரிட்ட[illegible]பாதணிமயிலே, கககூஅ

இது[illegible]து,

நெடியவிராசியந்தத்தினின்று[illegible]சையிற்பிணிகாட்டும்
படியின்முப்பதாம்பாகைப்பற்றி[illegible]ருந்தோன்றிசைமரணக
குடியிலநெட்டுடையோர்கள்சுபமேற்றுன்பம்பிணியாவர்
கொடியபாவரானககாற்கூறீர்மரணங்கொம்பனையே. கககூகூ

இதுவுமது-

அட்டமவிலக்கினத்துக்காதிபர்சநிபாமபோடே
விட்டிடக்கூடியாறின்மேவிடிலிவர்கடங்க
டிட்டமாநதிசைபொசிப்பிற்சித்திரமநனிற்சோரர்
கட்டிடும்விடத்தாற்றீயாற்கருவியான்மரணமாமே, ககஎய

இதுவுமது

ஐந்சொன்றுக்குடையோர்நானையருஞ்சநிபாம்மைக்கூடி
மிஞ்சியவெட்டின்மேவின்மிகுமிவர்திசைபொசிப்பி
னஞ்சினுநவேயாற்றீயானுணிக்கொள்வதனுநபாம்பாற்
றுஞ்சுவாகளபக்கொங்கைத்தூய்மொழியனையதேனே, ககஎக

அரிஷ்ட பலன்.

ஒன்பதோடொன்றுநாலுக்குடையவராறுளோனை
யின்பமாய்க்கூடியெட்டில்ருநதிடிலவர்திசைக்குட்
பின்புறசித்திரத்திற்பிள்ளையுர்பிதாவுநதாயும்
வன்புடன்மரணமெய்தும்வாட்டடங்கண்ணினாளே ககஎஉ

இதுவுமது.

நன்மாதுரேசனின்றநவாங்சந்தனிலிருநத
தன்மாலுநவாங்செத்திரசநிவருங்காலத்தன்னின்
மென்மாதுர்கண்டமென்றேவிளம்பினர்கணிதவல்லோர்
பொன்மானுமயிலும்வண்டுமபூவையும்பொருங்கண்ணாளே, ககஎங

இதுவுமது,

மதிசுங்கன்மாதுரேசன்மலிநவாங்கிசாதிபத்தோர்
துதிபெறுகிரணங்கொண்டேசொல்லுகமாதுர்கண்ட

சேர்ந்திடுமிர் தாட்சத்திரத்தினிற்குழவிதோன்றி
லாற்றிடுமோதூர்கண்டமாமெனவறைவர்தாமே, ௧௧௮௩

இதுவுமது.

வெய்யவன்மதியும்பாம்புமிகுத்தலக்கினத்திலாகச்
செய்யவனெட்டிநிற்கிற்சிசுவுடன்மாதூர்சாவாந்
தூய்யசாமிக்கோராநிற்றூயவெண்மதிக்கோரேழில்
வையமென்சநிசேய்நிற்கின்மகவுடன்றாயுஞ்சாவாம் ௧௧௮௪

இதுவுமது.

குனிபிறைதனக்கோராறேற்கூறெட்டுபன்னிரண்டி
னனவுறுபாவர்நிற்கநற்கோள்நோக்காதேனும்
பனிமதிகேழொட்டொன்பான்பாவரோயிருக்கநற்கோ
ளினிதுடன்பாராரரகிலீன்றதாயமகவுஞ்சாவாம். ௧௧௮௫

இதுவுமது

மங்கலனைினிற்கமதிரவிபனிரண்டாகிற்
பங்கமிலீன்றதாயும்பாலனுமரணமாகு
மிங்ஙனங்கிரகணவேளையிலக்கினந்தன்னிற்றோன்றத்
திங்களும்பாநுநிற்கிற்சிறுவனுந்தாயுஞ்சாவா ௧௧௮௬

இதுவுமது

அரியசேயருக்கன்றோனோங்கிசத்திருக்குமேனு
மூரியலக்கினத்திற்றிங்களுறவேழிற்சேயநின்றாலும்
பரிவிலக்கினத்திரிகோணமபற்றியேசநிசேய்நக்கத்
தெரிமதியேழினிற்கிற்சிறுவனைத்தாய்சிறப்பள். ௧௧௮௭

இதுவுமது.

பெருகமாவாசைசன்னிற்பிறந்திடும்பிள்ளைதன்னை
யிருமைசேருலகிலுள்ளோரியாவருஞ்சிரப்பரல்லான்
மருவுமிம்மதியைதசேவமந்திரிமகிழ்ந்தூடார்க்கி
லொருவர்க்குந்தோஷமில்லையொளிரும்வேற்கண்ணினாளே. ௧௧௮௮

இதுவுமது.

மதிசுங்கனிரவிதானும்வன்பாவமத்தியமாசப்
பதிபெறுபொன்மாற்றானைபணபுடன்பார்ப்பாராகிற்
சதியுறவந்தகர்ப்பந்தன்னிடமாதருசாவ
ளதிரசமொழுகுந்தீஞ்சொலாடவர்க்கழகமாதே. ௧௧௮௯

இதுவுமது.

பங்கனோநாலினிற்கப்பாவிகள்பார்க்கவெட்டோ
ரிங்கனீசமூட்மெய்திடின்மாதூர்நாசந்
துங்கநாமலான்பதுள்ளோர்சொற்சேர்த்ரத்திரிகோணத்து
மங்கலனிருக்கின்மாதாவருமரணத்தனாமே. ௧௧௯௦

இதுவுமது.

ஆவதாமொன்றநாலுமவ்விடத்திறைநர்தாமும்
பூவகத்திரிகோணத்திற்றிதிடநாலுக்குள்ளோன்

ருவுறுபெலவீனத்தாற்றனியுறமாதுர்தானே
பூவநுமரணமாவள் பூரிகருத்தநத்தினுளே.

இதுவுமது.

கலைமதிராசியினிற்பக்கதிரவனொன்பான்மேவத்
தலையுறப்பாவர்பார்க்கிற்றுயுமேமரணமாவ
ளலைவிலாவேழுக்குள்ளோனந்தினிலிருப்பானாகி
னலைவிலாமாதுராசமுறதிடமெனச்சொல்வாரே ககசுக

இதுவுமது

பெற்றபுத்திரத்தானத்தோன்பெலமுறவொன்றனாலுக்
குற்றவர்மதியைக்கூடியொடுங்கிதூர்ப்பெலமேயாகிற்
சொற்றருமாதுர்கொப்பத்துடனுயிர்சோர்வளென்றே
கற்றறிவுடைமையான்றகணிதாதாமுரைத்தவாறே. ககசுஉ

இதுவுமது,

ஒண்மதியங்கிசத்தோனுமாராசித்திரிகோணத்தில்
வெண்மதிவருங்காலத்தின்மிக்கதாய்மரணமாகும்
வண்மதிழ்பாக்கியத்தின்மதிரவிசேயிருக்கிற்
றண்மையாமாதுர்நாசநாமெனன்பர்தடங்கண்மாதே- ககசுங

இதுவுமது,

புகனெட்டிலிருக்குமேனும்பொலிவுறுபாக்கியத்தி
லிதமுற்றசுபர்நிற்கவெட்டினிற்பாவர்மேவிற்
சதமுறதந்தைதமுன்னைத்தாயமரணந்தானவண்
மதமுற்றவாரணத்தைமற்பொருந்தநத்தினுளே. ககசுச

இதுவுமது,

நெருங்குகேந்திரத்தினற்கோணிலைபெறக்கூடுமேனு
மொருங்குளவொன்றேட்டெழுக்குடையவர்கூடுமேனு
மருங்கிலாககிரகமாறவன்சுபார்க்குமேனு
மருங்கயற்கண்ணாய்மாதுரநுமரணத்தாளாமே. ககசுரு

இதுவுமது.

மாலவன்றனக்கோணந்தில்வானவரிருக்குமேனுஞ்
சாலவானைமநதிற்பத்திற்சநிசெவ்வாயிருக்குமேனு
மேலுமொன்றுமீறமெட்டிலீராறிற்பாவர்நிற்கிற்
கோலுமாதுலன்றனக்கேகூறிடுமரிட்டங்தானே. ககசுசு

இதுவுமது

மருவுமில்க்கினைத்திற்செவ்வாய்மதியுறமானிற்சாலிற்
குருவுடன்பாவர்கூடிககோணகேந்திரமுற்றாலும
பொருந்தவர்கேந்திரிக்கப்புகமொட்டொன்பானோர்கூட
வொருபாவர்பார்க்கிற்பிளளையுதிக்குமுன்றந்தைசாவான். ககசுஎ

இதுவுமது

வண்புதன்சநியுமைமநதின்மருவுநாலொன்பான்றன்னிற்
றிண்புரையபாவர்கூடச்சேய்பாக்கியத்தாந்தந்தான்

பண்பிலாப்பாவமத்தியம்பற்றியகுழவிதானே
தண்புவிக்குதயமாமுன்றந்தையேமரணமாவன். ௧௧௰௮

இதுவுமது

சுடரவனலினிற்பத்துப்பநாலுடையோன்ருனே
படருமாறெட்டீராரிற்பண்புடனிருக்குமேனு
மடர்கதிர்சீசனுகியாறுடையோனைக்கூடித்
திடனெட்டில்ருக்கின்மன்னர்சினத்தினற்பிதாவுஞ்சாவன். ௧௧௰௯

இதுவுமது

சூரன்பாம்பேழினிற்பத்தேர்ந்தெட்டோன்பார்க்குமேனும்
வாரமாமாலிற்பாநுமந்தனுமிருக்கவெட்டோன்
கோரமாம்பாவரோடேகூடியேபார்க்கவேதான்
பிரமாங்காலசந்திப்பிறந்திடிற்பிதாவரிட்டம் ௧௨௰

இதுவுமது

பதிபெறுபிதாராசிக்குப்பனிரண்டாமிடமதாக
வதிபதிராசிக்கேமூன்ருமிடமாகவந்தோன்
சதிருடன்றூரந்தசந்தன்னிலேயிருந்துக்கொண்டே
பிதிருடைக்கன்மஞ்செய்வன்பிறைநுதற்பேதைமாதே. ௧௨௰௧

இதுவுமது

சாமிக்கேயைந்துபத்திற்சந்திரனிருக்குமேனும்
பூமிக்காமிரவிக்கேழிற்பூமகனிருக்குமேனும்
வாமிக்காம்பதினென்ருன்பான்மந்தன்சேய்ப்பாம்புகூடி
லாமிங்கையாம்பிதாவுக்கரிட்டமென்றறையுநூலே. ௧௨௰௨

இதுவுமது

இடமுறுமிலக்கினத்திவிரவிதானிருக்குமேனு
மடவின்ரெண்டுதிக்குமூன்றிலாறினிற்பாவாநிற்கத்
துடருமீராறினற்கோடோன்றிரியநிற்குமேனுந்
திடமுளபிதாவரிட்டஞ்செப்பினர்தெளிவுள்ளோரே. ௧௨௰௩

இதுவுமது.

செய்யபாநுவுக்கோரெட்டிற்சேய்சநியிருக்கநற்கோண்
மெய்யுறப்பாராரேனும்வெய்யவன்றன்னைமாத
னையுறப்பார்க்கவல்லாலரிபாவமத்தியத்திற்
றெய்யுறவிருப்பானாகிற்சொற்பிதாவரிட்டமாமே. ௧௨௰௪

இதுவுமது.

தபனன்றீயோனைக்கூடிச்சரராசிகளிலிருக்கி
னிபமில்சத்திரவிடத்தானெருப்பிற்பிதாவரிட்ட
மேபமிகுரவியைச்செவ்வாயொண்சநிபார்க்கிற்பிள்ளை
யிபவியனத்தேதான்றுமுன்னேயெழிற்பிதாவரிட்டமாமே. ௧௨௰௫

இதுவுமது.

பாவராசியினிலிந்துப்பாநுவுமுறிற்கோணத்திற்
காவுறுபாவர்நிற்பிறகாவினிற்பிதிர்க்குரோகம்

தாவுறாருதானேதான்பெலத்தைந்தொன்பானின்
மேவுநப்பாப்பானுகின்மிருபிதாவரிட்டமாமே, ௧௨௱௬

இதுவுமது

கத்தியபிதாவின்சென்மராசிக்கேயாறெட்டாகச்
சத்துருராசிதன்னிற்றநயனைபிறக்குமேனு
முக்தமப்பிதாவின்சென்மமூற்நாள்பிறக்குமேனு
மைத்தடங்கண்ணினுளேவளாபிதாவரிட்டநதானே. ௧௨௱௭

இதுவுமது.

பூசஞ்சித்திரைபூராடம்புசன்மூலமகமுதற்கால்
பாசமாழிலிபநாற்கால்பரணியிரவிமூன்றுநகால்
பேசுறுத்திரமுதற்கால்பெருமிரேவதியுநாற்கால
வாசமாங்கிதியுந்றகமகவுறறுறபிதாவரிட்டம். ௧௨௱௮

கெண்டாந்தகாலம்,

கெண்டாந்தோஷமகவிசிக்கிரெட்டாகுங்
கேடையத்தந்தனக்கொன்றுமகத்துக்கோரெட்டாந்
தண்டார்சித்திரைமூலமோலாண்டதாகுஞ்
சாறறரியவாயிலியம்வருடமிரண்டென்பார்
கண்டாருத்திரமாதமிரண்டாகும்பூசங்
கருதுதிங்கண்மூன்றுகும்பூராடந்தனக்கே
கொண்டாடுமாதமொன்பான்றன்னிலேபிதுர்க்குக்
கொடிதாகுமரிட்டமெனக்கூறினர்கறறுணர்ந்தோர் ௧௨௱௯

இதுவுமது

ஆனரேவதியினுற்காலசுவிநிதனின்முதற்கான்
மோனமாங்கேட்டைநாற்நான்மூலத்தின்முதநகாறன்னி
லீனமாமிராசிச்சந்திலேந்தலேதோன்றுமேனுந்
தானைவைதிரிகோணத்திறநந்தைக்கேயரிட்டமாமே ௧௨௱௰

இதுவுமது

அலரியைச்சநிசேய்பார்க்கவல்லதுகூடிநிறக
விலகியசுபர்பாராலேநதலின்பாட்டன்கண்டம்
பலவிடக்கடிகையோடோபாநுவுஞ்சிங்கநிறகிற
குலவியபிதுர்கண்டந்தான்கூறினர்கணுநநூலோர். ௧௨௧௧

இதுவுமது

சூராறிறசநியும்பாநுமிக்கத்தேய்மதியேழாகி
லாராயுந்தந்தைக்கேதானன்றைக்கேமரணமெய்துஞ்
சீராருஞ்சுபரோபார்க்கிற்செப்புமூன்றுண்டிற்கண்டங்
காராருங்குழலாய்கேளாய்கணிதநூலியற்கையீதே. ௧௨௧௨

இதுவுமது

வாரமாஞ்சாரத்திற்பாநுமருவச்சேய்பார்க்கிற்றந்தை
தூரதேசத்திற்செல்வன்சொல்லியசரத்தின்மந்த

ணேரவேயிரவிசெவ்வாய்நேர்பார்க்கினிசியிறறேன்றிற
றீரமாகதந்தைதேசாந்திரத்தினிறறிரிவன்றேனே- ௧௨௧௩

இதுவுமது

சாத்தினின்மதியைமாலோன்றன்பார்க்கநிசியிற்றேன்றிற்
றிரத்துறதந்தைதேசாந்திரஞ்செல்வனிரவிமாந்தி
யிரத்தினிற்கூடிமூன்றிலிருக்கவைந்தொன்பானுளோர்
வரத்தொடுமறையத்தந்தைமரணமேயாவன்மின்னே, ௧௨௧௪

இதுவுமது.

மிக்கபாக்கியற்றிற்கேதுமேவிடவொன்பதுள்ளோன்
வக்கிரனுடனேகூடவஞ்சுபர்பாரராகிற
றக்கதோர்சிறியதந்தைசடுதியின்மரணமாவன்
மைக்கருங்கடலைச்சேலைவடிவேலைப்பொருங்கண்ணுளே. ௧௨௧௫

பிதுர்தீர்க்காயுள்.

சூரியர்க்கைந்தெட்டொன்பான்சுபர்நிறபவதனுக்குள்ளோர்
சீரியகேந்திரகோணஞ்சென்றுறிற்பிதாவுக்கேதான்
பாரினிற்றநமுஞ்செல்வம்பணைபுந்தீர்க்காயுளுண்டா
மேரிசைபொன்மால்வெள்ளியிநம்பெறிலிராசயோகம். ௧௨௧௬

பாட்டனரிஷடம.

கனலினைச்சநிசேய்பார்க்கக்கலாநிடச்சுபர்நோக்காரேல்
வனைசிசுபிறக்குமுன்னேமகிழ்தந்தைக்கரிட்டமாகும்
வினவியபிதாவைப்பெறறவீறுளபாட்டன்சாவன்
யனைபூடணான்கைம்மானைப்பார்வையான்மயகுமாதே. ௧௨௧௭

பிதுராதியரரிஷடம்.

கதித்திடுமைந்துக்குள்ளோன்காரகன்சத்துருநீசம்
பதித்தவங்கிசத்திலேறப்பகரைநிறசநியிராகு
கொதித்தெழுகுளிகன்பார்க்ககூடவேயிருக்குமேனுந்
துதித்திடுந்தந்தையானோன்றுக்கத்தையடைவன்றேனே ௧௨௧௮

சகோதராரிஷடம்.

பந்தமாஞ்சரகேந்திரத்திறபாநுவேயிருக்கத்தோன்றுஞ்
சந்தநிபிதாவுக்கேதான்றனுதவாமற்போவ
னுந்தியமூன்றிற்காரியுறச்சகோதரத்திறபிணை
பிந்தியபாநுநிற்கிற்பிறசகோதரவரிட்டம் ௧௨௧௯

இதுவுமது.

ஏகியமூன்றோன்மூன்றிலிருநதவன்பார்த்தோனஞ்ச
மாகியவிவர்கடன்னினற்பலந்நமடனோன்
வாகினிறவிசைபொசிப்பின்மன்னுசித்திரத்திலேதான்
போகியாஞ்சகோதரங்கள்பூமிசையிறந்துபோமே. ௧௨௨௰

இதுவுமது,

போறறியமூன்றுளோனும்பூவனுங்கூடியெட்டிற
றேறறிடத்துணைவர்நாசஞ்சொலுமிவர்தம்மைப்பாற

சாற்றிடக்கூடிநின்றூற்சனேத்ரமுண்டாய்நாச
நூற்றருங்கதியைப்பாவர்நோக்கிடிற்சேட்டர்நாசம். கஉஉக

இதுவுமது,

கடுத்திடுஞ்சநிசெய்மூன்றிற்கலந்திடப்பாவர்பார்க்கி
லடுத்திடுந்துணைவரில்லாமரிட்டமென்றறைவர்மேலோ
ரெடுத்தகாரகன்மூன்றேனாக்கிறைபெலவீனமாகி
லுடுத்திடுமாறிறைற்போலுற்பத்தியாகிநாசம். கஉஉஉ

இதுவமது,

ஒன்றியமூன்றானாலுக்குடையவர்தன்னைச்செவ்வா
யன்றிமற்றோர்கள்கூடிலவர்நோக்கிற்றுணைவர்நாசந்
தூன்றியகேட்டைடாவிற்றேகையேபிறக்கிற்சேட்டர்
மன்றினிமேஷசமாகும்வடிவகலல்குலாளே. கஉஉ௩

இதுவுமது,

கரவிலாப்பூசநாலிற்கடகலக்கினமதாகப்
பரவியபாவர்நிற்கப்பனைவிட்டோனிருக்கப்பார்க்க
விரவுவைதிருநிகண்டம்விதிபாதம்வியாகாதத்து
முரவிடநாடித்திங்கண்மூன்றெட்டிற்சேட்டர்நாசம்- கஉஉ௪

களத்திராரிஷ்டம்-

றுள்ளியரெண்டிலேறோன்சுக்கிரனிவர்கண்மூவர்
தள்ளியபாவவர்க்கத்தாறுய்த்தியோர்சேர்ந்தாலும்
வெள்ளவரும்பெண்ணிற்பாநுமீதத்திற்சநிநின்றாலுங்
கள்ளவிழ்கோதைமாதேகளத்திரநாசமாமே- கஉஉ௫

இதுவுமது

சுக்கிரன்செவ்வாயேழிற்சேரலுமைநதொன்பதிலுற்றாலு
மிக்கவொன்றேழொன்பானின்மேயுந்தேய்மதியுமபாவ
ரொக்கவேகூடுமேனுமோரேழுமதற்குளோனு
மக்கணம்பாவமத்தியமாயிடிற்றாரநாசம்- கஉஉ௬

இதுவமது

வியத்தில்கேந்திரத்திற்செவ்வாய்மேவிடவிரண்டேழுள்ளோ
ரியற்பெலவீநமேனுமெழின்மாந்தியதனைச்சசெவ்வாய
செயசசநிபார்க்குமேனுஞ்சேய்மதியிரவிமந்த
னயப்புதன்கூடினுலுமில்களத்திரந்தாநாசம்- கஉஉ௭

இதுவுமது.

ஓரேழிற்பன்னிரணடிலொன்பதிற்சனியிருக்கக்
காரேறுபாவர்பார்க்கக்களத்திரம்விவாகமீநஞ்
சீரேழிலட்டமத்தோன்சிகிகூடிப்பாவபார்க்கிற்
பேரேழுகளத்திரவீநம்பிறர்மனைப்போசிப்பனவன்- கஉஉ௮

இதுவமது

சனித்தினிலேழில்ராகுசனிநிற்கவதனுக்குள்ளோர்
சனத்தூறுபாவவர்க்கங்கலந்திடிற்களத்திரவீநம்

லனத்துறுபுதனிலாமன்மற்றவர்கூடிநிற்கி
லினத்துறுகளத்திரவீனமென்றனரினியதேனே- க௨௨௯

இதுவுமது.

வெள்ளியுமிரண்டேழுளளோர்மிகுபாவவர்க்கமாகி
யெள்ளியசீசமூடமெய்திப்பன்னிரண்டாறெட்டில்
வள்ளிதாயிருக்கிற்கொண்டமனைவியரநேகமேனு
மௌளிதாய்ககொளளக்கொள்ளவொழிவதுதிண்ணமாதே- க௨௩௰

இதுவுமது.

இணங்கியவொன்றேடேழுக்கிறையவன்பெலமிலாமல்
வணஙகுமெட்டாறீராறின்மருவிடப்பாவர்பார்க்கி
லணங்கோகளத்திரந்தானுமரணந்தான்செய்வள்
குணங்குறிபெலங்கண்டோதுங்குருகடாட்சத்தினாலே- க௨௩௧

இதுவுமது

அடவுறுமொன்றேரேழுக்கதிபாசெவ்வாயைக்கூடித்
தடவுறுபாவவர்க்கத்தானுற்றேயெட்டின்மேவத்
திடங்கொள்கேந்திரத்தோன்பார்க்கச்செறிவுடன்கூடினானு
மிடனுற்றகளத்திரந்தானிசைந்தநுமரணமாமே- க௨௩௨

இதுவுமது.

நிலவுமொன்றேழுக்குள்ளோர்கோணகேந்திரதந்னேற
நிலமகன்பார்க்கவிண்ணேர்நீடிசையவகாரத்தி
லிலகில்சித்திரத்திற்பாரியநுமரணந்தான்செய்வ
டிலதநீண்முடிவிண்ணாட்டோர்தேடியவமிர்தமர்தே- க௨௩௩

இதுவுமது.

அரியதோரேழுதன்னிலதிபன்சுங்கனுமேநிற்கத்
தெரியுமட்டமத்தோன்சேயைச்சேர்ந்துறக்கூடிப்பார்க்கிற்
பிரிவிலாக்களத்திரத்தான்பின்னநுமரணமாவள்
விரியுளகணிதநூலோர்விதிப்படியுரைத்தவாறே- க௨௩௪

இதுவுமது.

எழுதியவொன்றிரண்டிக்கிறைவர்க்குஞ்சுங்கனுக்கும்
பழுதிலாவைந்தெட்டிற்பனிரண்டிற்பாவர்நிறகிற்
கொழுவுறத்திசைபொசிப்பிற்கூறியசித்திரத்தில்
விழுமியகளத்திரநாசம்வேற்றடங்கண்ணினாளே. க௨௩௫

இதுவுமது.

அறைதருமேழெட்டீராறதனிற்சேயுமொண்டேழுக்
கிறைவரும்வெள்ளியுந்தானிசம்பெலவீனமேனு
நிறையுமேழெட்டிற்பாவர்நிற்கபன்னிரண்டிற்செவ்வா
யுறைவனேற்றாநாசமொளிர்பசுங்கமலத்தேனே. க௨௩௬

இதுவுமது

பனிரண்டிற்பாவர்மல்கப்பகர்மூன்றிற்சுபரிருக்க
மனியலக்கினத்திற்காரிமருவப்பொன்பாராதேனுங்

